

உ

சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத்திங்கள் இதழ்

மலர் 14 ] அக்டோபர் 1998 [ இதழ் 4

பெருமைதரு ஆசிரியர், ''திருமுறைக்காவலர்''

M. கண்ணப்ப செட்டியார்

(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)



ஸ்ரீ மெய்கண்ட தேவர் ★ 21—10—98

ACC NO. 34335




1998
அக்டோபர்
மலர் 14
இதழ் 4

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

## நமது சிந்தனைக்கு

### 'மெய்யநின்ற பெருமான்'

செய்ய மேனி வெளிய பொடிப் பூசுவர் சேரும் அடியார்மேல்
பைய நின்ற வினை பாற்றுவர் போற்றிசைத் தென்றும்
பணிவாரை
மெய்ய நின்ற பெருமான் உறையும் இடம் என்பர்
அருள்பேணிப்
பொய்யிலாத மனத்தார் பிரியாது பொருந்தும் புகலூரே.

—திருஞானசம்பந்தர்

சிவந்த திருமேனியிலே வெண்மையான திருநீற்றைப் பூசிக்கொள்பவரும், தம்மை அடையும் அடியவர்களிடத்து மெல்லச் சிறிது சிறிதாகத் தங்கியுள்ள வினைகளைக் கெடுப்பவரும், முக்தியைக் கொடுப்பவரும், தம்மை எந்நாளும் துதித்துப் பாடி வணங்குவோரை மெய்ம்மையாக்கி நிற்பவருமான பெருமான் வாழும் இடம், தமது அருளைக்கோரிப் பொய்யில்லாத மனமுடைய அடியவர் எக்காலத்தும் நீங்காது வசிக்கின்ற திருப்புகலூர் என்று பெரியோர் கூறுவர்.

---

மௌனமாய்த் தியானித்தால் மனம் கலங்காநிலை பெறும்.

—மகாவீரர்



# குரு — லிங்க — சங்கமம்

(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்)



''ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து''

[திருஞானசம்பந்தர் திருவவதாரத்தால் உலகம் பெற்ற அளப்பரிய நலன்களும் – மந்திரமாவது இது என்ற விளக்கமும் – மெய்யறிவு தலைப்பட நாம் இயற்ற வேண்டுவன இவை என்பதும் சீகாழி, குரு-லிங்க - சங்கமத் தலமாகத் திகழ்கிறது என்பதும் இங்கே விளக்கம் பெற்றுத் திகழ்கின்றன.]

**சிவஞானப் பாலமுது :**

வேதநெறி தழைத்தோங்கவும், சைவத்துறை, விளக்கம் பெறவும், இன்றைக்கு 1300 ஆண்டுகளுக்கு முன் திருவவதாரம் செய்தார் திருஞானசம்பந்தர். பல பிறவிகளில் செய்த நல்வினைப் பயனால் மூன்று வயதிலேயே அம்மையளித்த சிவஞானப் பாலமுதுண்டு, உலகம் உய்ந்து கடைத்தேறுதற் பொருட்டுத் தேவாரத் திருமுறைகளை அருளிச் செய்தார். இவர் சிவஞானப் பாலுண்ட இத் திருநாளைப் பன்னெடு நாட்களாகச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடி வருகின்றோம்.

**ஒருவர் அழுகை பலருக்கு மகிழ்ச்சி :**

சமய ஆசாரியர்களைப் போற்றி வழிபடுவது சமய வளர்ச்சிக்கு உறுதுணை புரியும். வையகம் அனைத்தும் துயர்தீர்ந்து மக்கள் நல்வாழ்வு பெறுதற் பொருட்டு வாழ்ந்தருளிய ஞானசம்பந்தர் போன்ற பெருமக்களை உலகம் நன்றியோடு வழிபடக் கடமைப் பட்டுள்ளது. ஞானசம்பந்தர் அன்று அழுததால்தான் இன்று நாம் மகிழ்ச்சியோடு வாழ்கின்றோம். பிறந்த குழந்தை

---

**இறை நம்பிக்கை என்னும் சிப்பிக்குள் இருக்கும் முத்துத் தான் தொழுகை**

— இகபால்

அழுதால் தான் பெற்றோர் சிரிப்பர். குழந்தை அழமறந்தால் உற்றார் அழுவர் என்று கூறுவார்கள். ஞானசம்பந்தர் அழுகை யால் உலகமே மகிழ்ச்சியுற்றது என்று கூறுகின்றார் சேக்கிழார்.

''கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை பொலிபெருக எவ்வுயிருங் குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம்பொருமிஅழு தருளினார்''

என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு.

**குழப்பம் நீங்கத் துணை புரியும் :**

ஞானசம்பந்தரைப்பற்றிய நினைவு குழப்ப காலங்களுக்குத் தெளிவுதரும் அரிய சாதனமாகும். அவர் அவதரித்தருளிய காலம் சமயக் குழப்பம், சமுதாயக் குழப்பம், அரசியல் குழப்பம் என்று நாடு பல்வேறு இடர்ப்பாடுகளில் இருந்த காலம். ஞானசம்பந்தர் அவதரித்தபின் அக் குழப்பங்கள் விலகி நாட்டில் தெளிவுநிலை ஏற்பட்டது. ஞானக்கதிரவனாகிய இவர் அவதரித்தருளிய பின் னர்ப் புறச்சமயஇருள் விலகி ஓடிற்று. சமுதாயத்தில் ஒற்றுமை, நம்பிக்கை, தொண்டுள்ளம் முதலியன வளர்ந்தன. அரசியல் சூழ் நிலை திருத்தம் பெற்றது. ஞானசம்பந்தரை நாம் போற்றினால் நமக்குள்ள அறிவுக் குழப்பங்கள் மனக்குழப்பங்கள் விலகிப் போகும். இன்றைய வாழ்வியலில் எல்லாத் துறைகளிலும் குழப் பங்கள் ஏற்பட்டு மக்கள் மனவளர்ச்சி சீர்கேடடைந்து வருகின் றது. இக் குழப்பங்கள் அனைத்தும் விலக, மனநலம் சிறக்க ஞானசம்பந்தர் விழா துணைபுரியும்.

**ஞானசம்பந்தர் பெயர் முறை :**

இத்தகைய விழாக் காலங்களில் ஈடுபடும் அன்பர்களாவது தங்கள் வாழ்க்கையை நெறிப்படுத்திக்கொள்ள சில முறைகளைப் பின்பற்றுதல் வேண்டும். ஞானசம்பந்தர் என்ற பெயரின் பொருளை உணர்ந்து அதைப் போற்றுதற்காகவாவது உறுதி

---

**நாம் கனவிலும் கருதவொண்ணாத அளவுக்கு மேல் காரியங்களைப் பிரார்த்தனையால் சாதிக்கலாம்.**

— டெனிஸன்

யெடுத்துக்கொள்ள வேண்டும். 'சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம், உவமையிலாக கலைஞானம், உணர்வரியமெய்ஞ்ஞானம் ஆகியவற்றை அம்பிகை திருமுலைப்பாலில் கலந்துகொடுக்க உண்ட அவர், ஞானத்தோடு சம்பந்தப்படுத்தப்பட்ட காரணத் தால் சிவஞானசம்பந்தர் ஆயினார். உலகியலில் ஒருவருக்கு ஒருவர் பெண் கொடுத்தும் - கொண்டும் உறவு கொள்கின்றனர். இவ்வகையில் பெண்ணின் பெற்றோர்களுக்கும், பிள்ளையின் பெற்றோர்களுக்குமிடையில் தோன்றும் உறவு முறையைச் சம் பந்தி என்று அழைக்கின்றனர். இவை ஊனோடு (உடலோடு) வரும் சம்பந்தமாகையால் 'ஊனசம்பந்தம்' என்று பேசப்பெறும். இன்றும் ஞானசம்பந்தர் என்ற பெயரையும் சம்பந்தி என்ற பெயரையும் பொருள் உணராமல் வழங்குவோர் பலர் உள்ளனர்' சம்பந்தர் என்பதனைச் 'சம்மந்தர்' என்றும், சம்பந்தி என்பதனை சம்மந்தி என்றும் பகரத்திற்குப் பதில் மகரத்தை இட்டு எழுது வோரும் பேசுவோரும் உள்ளனர். இச்சொற்களின் பொருள றிந்து இருந்தமுற எழுதுவதும்-பேசுவதும் மொழி வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் துணையாகும்.

**நிறைமொழிமாந்தர் மறைமொழியே மந்திரம் :**

ஞானசம்பந்தர் என்ற பெயர் ஒற்று நீக்க ஐந்தெழுத்தாக விளங்குவது. நாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, மணிவாசகர் என்ற திருப்பெயர்களும் இவ்வாறே ஐந்தெழுத்துக்களாக விளங்குவன. இவற்றைப் 'பக்தபஞ்சாக்ஷரம்' என்பர். 'ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரம்' என்று கூறுகிறார் சேக்கிழார், இதனால் ஞான சம்பந்தராகிய பெருமக்கள் இறைவனாகவே கருதி வழிபடத் தக்கவர்களாக விளங்கியமையும் ஞானசம்பந்தரை வழிபட்டு, நின்றசீர் நெடுமாறரும், நாவுக்கரசரை வழிபட்டு அப்பூதி அடி களும், சுந்தரரை வழிபட்டுப் பெருமிழலைக்குறும்பரும் சிவப் பேறு எய்தியமையும் இக்கருத்துக்கு அரண் செய்கின்றன. படைத் தல் காத்தல்அழித்தல் என்னும் முத்தொழில்களும் இப்பெருமக்கள் வாழ்வியலில் இடம்பெற்ற சிறப்புகள் இவர்களது இறைமைத் தன்மைகளை விளக்கி நிற்கின்றன. மந்திரம் என்ற சொல்லுக்கு நினைப்பவரைக் காப்பது என்பது பொருள்.

---

வைத்தியரைவிடத் தூக்கம் நல்லது — ஜெர்மனி

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப''

என்பது தொல்காப்பியம். அருளிக்கூறினாலும் வெகுண்டு கூறினாலும் அவ்வப் பயன்களைத் தந்தேவிடும் மொழியுடையார் நிறைமொழி மாந்தராவர். வாழ்க்கையில் நன்மை தீமைகளைச் சமமாக எண்ணி - யாரையும் குறை சொல்லாமல் - யார்மீதும் குறைபட்டுக்கொள்ளாமல் - எதிலும் நிறைவையே காண்கின்ற சிறப்பினால் இவர்கள் இப்பெயர் பெற்றனர். எவற்றிலும் குறை காணும் இயல்பும் யாவரையும் குறையாகப் பேசும் பழக்கமும் உடைய ஏனையோர் குறைமொழி மாந்தராகவே கருதப்படுவர். நிறைமொழி மாந்தர் அருளியவை அனைத்தும் மந்திரங்கள் என்றே மதித்தற்குரியனவாகும்.

**மெய்யறிவு எது?**

இறைவனை முக்காரணங்களாலும் பக்தி செய்தவர் ஞானசம்பந்தர். உள்ளத்தால் - வாக்கால் - மெய்யால் பொய்யா தொழுகியவர் ஞானசம்பந்தர். மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் தூயவனாக இருந்தால்தான் இறைவன் திருவருளைப் பெறமுடியும். ''உள்ளத்தால் பொய்யாதொழுகின் உலகத்தார் உள்ளத்துளெல்லாம் உளன்'' என்று வள்ளுவர் கூறுகின்றார். பொய் - மாறுபடுவது, மெய் மாறுபடாதது. நம் உடல் பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் இயன்றது. அவரவர் செய்த கன்மங்களுக்கு ஏற்ப இறைவன் உடல் உறுப்புகளைத் தருகின்றான். கர்மம் என்பது அவரவர் செய்யும் செயல்களாகும். நல்ல கர்மம்- புண்ணியம். தீயகர்மம் — பாவம். இவ்விருவினைப் பயன்களின் படியே உலகில் உயிர்களுக்கு நன்மை தீமைகள் நிகழ்கின்றன. பாவம் செய்தவர் துன்பமடைவர். புண்ணியம் செய்தவர் இன்பம் அடைவர். முப்பொருள்களின் உன்மையியல்புகளை உள்ளவாறறிந்து இறைவன் திருவடி அடைதலே உயிர்கள் பெறுதற்குரிய பயனாகும். அத்தகைய இறையருளைப் பெறுதற்கு இறைவழிபாடு இன்றிமையாதது.

''பல்லூழி காலம் பயின்றானை அர்ச்சிக்கில்
நல்லறிவு சற்றே நகும்''

---

சிந்தித்துப் பார்ப்பவர்களுக்குத்தான் உண்மை புலனாகும்.

— காலின்ஸ்

என்றுகூறுகின்றவாறு இறைவனை இடைவிடாமல் நினைப்பதும், வாழ்த்துவதும் வழிபடுவதுமே ஞானம் பெறுதற்கு உரிய வழிகளாகும்,

**குரு லிங்க சங்கமத்தலம் :**

சீகாழி சிறந்த தலம். குரு லிங்க சங்கமத்தலம் என்று இதனைச் சிறப்பித்துக் கூறுவர். தோணியப்பர் – குருமூர்த்தம், பிரமபுரீசுரர் - இலிங்க மூர்த்தம், சட்டைநாதர் - சங்கம மூர்த்தம் என்ற நிலையில் இத்தலம் சிறந்து விளங்குகிறது. ஞானசம்பந்தர் உலகம் உய்தற்பொருட்டுத் தாம்பெற்ற அருளனுபவங்களை நாமும் பெற்றுய்தற்பொருட்டுத்தேவாரத் திருமுறைகளை அருளிச் செய்தவர். அப்பெருமான் திருவருளினால் உலகம் சமய நெறியில் நின்று சிறப்புறவேண்டும் என்பதுதான் நமது எண்ணம்.

துன்பம் வரும்போதுதான் மனிதன் திருந்துகின்றான்; சுடச் சுடரும் பொன்போல் ஒளிபெறுகின்றான். இன்பக்காலத்தும் துன்பக் காலத்தும் இறைவனை மக்கள் மறவாது போற்றுதல் வேண்டும். துன்பம் வரும்போது தளராது நம் பக்தியை, உரம் பெறுமாறு செய்து கோடல் வேண்டும். இத்தகைய அருள்விழாக் களில் ஈடுபடுவதன் மூலந்தான் நம் பக்தி மேலும் உறுதிப்படும் ஞானசம்பந்தர் திருவிழாவை 15 ஆண்டுகளாக ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமணிஅவர்கள் மிசச் சிறப்பான பல திட்டங்களுடன் அற்புத விளக்க விரிவுரைகளோடு நிகழ்த்தியருளினார்கள். அவா கள் திருவுள்ளம்போல இவ்விழா, சிறப்புற நிகழ்கிறது.

**பண்சுமந்த பாடகர்க்குப் பரிசு :**

ஞானசம்பந்தர் விழாவில் ஞானசம்பந்தர் அருளிய தேவா ரப்பணியை ஞாலமெல்லாம் பரவச்செய்யும் தொண்டரைப் பாராட்டுவதுதான் ஞானசம்பந்தருக்கு மிக உகந்ததாகும் என்ற முறையில் ஆண்டுதோறும் கயிலைக்குருமணி அவர்கள் திருமுறைப் பண்ணிசைவாணர் ஒருவர்க்குத் ''திருமுறைக் கலாநிதி'' என்ற பட்டம் பொறித்த பொற்பதக்கம் வழக்கிப் பொன்னாடை போர்த்திப் பணமுடிப்பு வழங்குவது என்ற திட்டத்தை அமைத் தருளினார்கள். இதுபோலத் திருவாமூரிலும் அப்பர் சுவாமிகள்

---

நம்மை உயர்த்துவது செயலன்று; செய்வதிலுள்ள ஆர்வமே
—பிரௌளிங்

குருபூசை விழாவில் திருமுறைப் பண்ணிசை வாணர் ஒருவர்க்குப் பட்டமும் பணமுடிப்பும் வழங்கும் திட்டத்தை வகுத்தருளினார் அன்று இறைவன் திருவீழிமிழலையில் ஞானசம்பந்தருக்கும் அப்பருக்கும் பொற்காசுகள் வழங்கினான். அதனை நினைவுறுத்துவதுபோல திருமுறை ஓதுவார் இருவர் ஆண்டுதோறும் பரிசில் பெற்று வருகின்றனர்.

— நன்றி 'திருவருட் செய்தி'




சண்முகம் எண்டர் பிரைஸ்

ஜவுளி வியாபாரம்

17/1 பத்துத் தூண் சந்து

மகால் வடம் போக்கித் தெரு, மதுரை-625 001

போன் : கடை 626137

வீடு 37949



(F) 538733

(F) 653712

(R) 536323

A.S. பாலி இண்டஸ்டிரீஸ்

77, விஸ்வநாத நகர், கோ. புதூர்

மதுரை - 625 007

தயாரிப்பாளர் : HM, HD, LLDP, PP பாலிதின் பைகள் மற்றும் பலவண்ணங்களில் பிரிண்டிங் செய்து தரப்படும்.


சுறுசுறுப்போடு இயங்கும் போதுதான் மனிதன் பிரகாசிக்கிறான்.

— பெய்லி

## ஐப்பசி மாத அடியவர் வழிபாடு

### பூசலார் நாயனார் (23-10-98)

''''மனத்தினாற் கருதி யெங்கும் மாநிதி வருந்தித் தேடி
எனைத்துமோர் பொருட்பே றின்றிஎன் செய்கே னென்று நைவார்
நினைப்பினா லெடுக்க நேர்ந்து. நிகழ்வுறு நிதியமெல்லாம்
நினைத்துணை முதலாத் தேடிச் சிந்தையால் திரட்டிக்
கொண்டார்''

தொண்டை நாட்டில் திருநின்றவூரில் மறையவர் குலத்து தித்தவர் பூசலார். அரனுக்கு ஆலயம் அமைக்க எண்ணினார். தமது பொருளாதார எளிமையால் பொருளுதவி செய்திட யாதொருவரும் முன்வராததை யுணர்ந்து தம்மனத்திற்குள்ளேயே கோயில மைத்தார். திருக்குட முழுக்கு நாள் குறிப்பிட்டதை, இறைவன் உலகறியச் செய்தார். குரு பூசை ஐப்பசித் திங்கள் பூசம் நல்நாள்.

### ஐயடிகள் காடவர்கோன் நாயனார் (25–10–98)

''மன்னவரும் பணி செய்யவடநூல் தென் றமிழ் முதலாம்
பன்னுகலைப் பணிசெய்யப் பாரளிப்பார் அரசாட்சி
இன்னல் என இகழ்ந்ததனை எழிற்குமரன் மேலிழிச்சி
நன்மை நெறித்திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார்''

ஐயடிகள் காடவர் கோன் பல்லவ குல அரசர். காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு வடமொழி தென் தமிழ்க்கலைப் பணியை முதன்மையாகக் கொண்டு சிவப்பணி செய்து பல தலங்களை வழி பாடுசெய்து 'க்ஷேத்திரத் திருவெண்பா' பாடியுள்ளார். பதினோ ரம் திருமுறையில் இந்நூல் இடம் பெற்றுள்ளது. குருபூசைநாள் ஐப்பசித் திங்கள் ''மூலம்'' நன்னாள்.

---

உழைப்பால் களைப்பு அடைகிறவர்களே இன்பம் அடை கிறார்கள்

— பெர்னார்டுஷா

## திருமூல நாயனார் (3-11-98)

ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோர் உய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம் பொருளாம்
ஏனஎயி றணிந்தாரை ''ஒன்றவன்தான்'' என எடுத்து

திருக்கயிலாய சித்தர்களுள் ஒருவர் ''திருமூலர்''. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற அடிப்படை உண்மையை சைவ சமயத்தின் வழி நின்று உலகிற்கு உணர்த்தியவர் திருமூலர், சாத்திரக் கருத்துக்களை தோத்திர முறையை, ''திருமந்திர மாலை'' என்றநூலின் மூலம் சைவசமயத்தைப் பின் பற்றும் யாவரும் அறிந்து கொள்ள வழி வகுத்து 3108 பாடல்களை பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாக இடம் பெறச் செய்தார். குருபூஜை நாள் ஐப்பசித் திங்கள் அசுபதி நன்னாள்.

## நின்றசீர் நெடுமாற நாயனார் (4-11-98)

''தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுடல்
தோயுநெடுங்குருதிமிடுக் குளித்து நிணந்துய்த்தாடிப்
போயபரு வம்பணி கொள் பூதங்களே யன்றிப்
பேயும் அரும் பணிசெய்ய உணவளித்த தெனப்பிறங்கா''

நின்றசீர் நெடுமாறர் பாண்டிய மன்னர். சைவநெறிச் சார்புடைய மங்கையர்க்கரசியாரை மனைவியாகப் பெற்றவர். திருஞானசம்பந்தர் ''திருநீற்றின்'' பெருமையை உணர்த்த சமணத்தினின்றும் சைவநெறியைப் பின்பற்றி திருநீற்றின் பெருமையை உலகோர் உணரச்செய்தவர். குருபூசை நாள் ஐப்பசித்திங்கள் 'பரணி' நன்னாள்.

## இடங்கழி நாயனார் (5-11–98)

''மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேல்மன்னர் வினவுதலும்
அத்தனடியாரையா னமுது செய்விப் பதுமுட்ட
இத்தகைமை செய்தேன் என்றியம் புதலு மிக விரங்கிப்
பத்தரைவிட் 'டிவரன்னோ' பண்டார மெனக் கென்பார்''

கொடும்பாளூர் சிற்றரசராகிய இடங்கழியார் சிவனடியாருக்குணவிடுதல் முட்டின்றி நடைபெற, தவறிழைத்தோரையும் மன்னிக்கும் சிவத் தொண்டினைச் செய்து முத்திப்பேறு பெற்றார். குருபூசைநாள் ஐப்பசித் திங்கள் கார்த்திகை நன்னாள்.

---

சமயமறிந்து பேசுதலால் வெற்றி யுண்டாம். —சான்றோர்

சத்தி நாயனார் (10 11—98)

''அத்தராகிய அங்கணர் அன்பரை
இத்த லத்தில் இகழ்ந்தியம் பும்உரை
வைத்த நாவை வலித்தரி சத்தியால்
சத்தி யார்எனும் நாமமும் தாங்கினார்''

சிவனடியாரை இகழ்பவர் யாரெனினும் அவரது நாக்கைக் குறட்டியினால் அறுத்திடும் ஆண்மையும் சிவனடியார்பால் அள வற்ற பற்றும் உடையவர். குருபூசை நாள் ஐப்பசித் திங்கள் பூசம் நன்னாளாகும்.

மெய்கண்டார் குருபூசை நாள் 21-10-98 ஐப்பசித்திங்கள் சுவாதி நன்னாள்.

இக்குருபூஜை நாட்களில் சமயகுரவர்க்கும் சந்தான குரவர்க் கும் திருக்கோயிலில் வழிபாடும் பன்னிரு திருமுறை மன்றத்தில் திருத்தொண்டர்புராண சிந்தனையும் நிகழும்.

— C. S. சொக்கலிங்கம்

---

தலவரலாறு

## திருப்பாற்றுறை

காவிரி வடகரையில் 59-ஆவது தலமாக விளங்குவது திருப்பாற்றுறை. இக்காலத்தில் திருப்பாலத்துறை என வழங்கு வதாக அறிகிறோம். திருவானைக்கா - கல்லணைச் சாலையில் பனையபுரம் என்ற இடத்தில் இறங்கிக் கொள்ளிடம் நோக்கி வரவேண்டும். திருவானைக்காவிலிருந்து கிழக்கே சுமார் 8 கி.மீ தொலைவில் உள்ளது. நகர்ப்பேருந்து வசதிகள் உண்டு.

மூலவர் சுயம்பு. பொன் நிறமாகப் புற்றிலெழுந்த ஊர் மார்க்கண்டேயர் அபிஷேகம் செய்யப் பசுவின் பால் கிடைக் காமல் வருந்த சிவபெருமான் பால் பெருகும்படி அருள்பாலித்த தால் பாற்றுறை எனப் பெயர் பெற்றது. சம்பந்தர் திருப்பதிகம் ஒன்று மட்டுமே பெற்ற தலம். ''பாற்றுறை மேவிய பத்து நூறு பெயரான்'' என்ற வாக்கினால் இங்கு சகஸ்ர நாம அர்ச்சனை விசேஷம். சூரியன் பூசித்த தலம்.

இறைவர் திருப்பெயர்—திருமூலநாதர், ஸ்ரீமூலநாதேசுவரர்
இறைவி—மோகநாயகி, மேகலாம்பிகை
தீர்த்தம்—கொள்ளிட தீர்த்தம்
தலவிருட்சம்—வில்வம்.

---

தெளிவான பேச்சு தூய்மையான உள்ளத்தின் எதிரொலி

—வில்லியம் லா

## திருப்பாற்றுறை

# பதிகப்பெருவழி—59

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

திருப்பதிக வரலாறு

திருவானைக்காவில் சில நாள்கள் தங்கி, நீர்த்திரள்நாதரை வணங்கி மகிழ்ந்து, அங்கிருந்து அகன்று, திருத்தவத்துறை என்னும் தலத்தினை அடைந்து அங்கு தேவதேவரை இனிய தமிழ் மாலை கொண்டு துதித்து வைதிகநெறியின் பெருமணி போன்ற திருஞானசம்பந்தப் பெருமான், திருப்பாற்றுறை என்னும் தலத்தையடைந்து, அங்கு இடபாரூடராகிய சிவபிரானைத் துதித்துப் பாடிய செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம்

பண்—பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

காரார் கொன்றை கலந்த முடியினர்
சீரார் சிந்தை செலச்செய்தார்
பாரார் நாளும் பரவிய பாற்றுறை
ஆரா ராதி முதல்வரே. 1

கார்காலத்துக்குரிய கொன்றை மலர் மாலையைச் சூடிய திருமுடியை உடையவரும் சிறந்த என் சிந்தை தம்மிடமே செல்லும்படி செய்தவரும் உலகத்து மக்கள் அனைவரும் நாள் தோறும் பரவிய திருப்பாற்றுறையில் கோயில் கொண்ட ஆத்திப் பூமாலை சூடிய ஆதிமுதல்வராகிய சிவபெருமானாவர்.

நல்லா ரும்மவர் தீய ரெனப்படும்
சொல்லார் நன்மலர் சூடினார்
பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை
எல்லா ரும்தொழும் ஈசரே. 2

பற்கள் நிறைந்த வெண்டலையணிந்த செல்வரும திருப் பாற்றுறையில் எழுந்தருளியிருக்கும் எல்லோரும் தொழும்எம் ஈசருமாகிய சிவபிரான் நல்லவரும் ஆயினும் தீயர் என்றும் சொல்லப்படுவரும், நல்ல மலர் மாலையைச் சூடினவரும் ஆவர்.

---

அதிர்ஷ்டம் தராததைத் திருப்தியால் பெறலாம்.
—கோல்டுஸ்மித்

விண்ணார் திங்கள் விளங்கும் நுதலினர்
எண்ணார் வந்தென் எழில்கொண்டார்
பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை
உண்ணா ணாளும் உறைவரே. 3

வண்டுகளின் கூட்டம் பண்ணோடு பொருந்திய பாடல்களை இசைக்கும் திருப்பாற்றுறையில் எப்போழுதும் உறைபவரும் விண்ணிலேயுள்ள பிறைச்சந்திரன் விளங்கும் நெற்றியினருமாகிய சிவபெருமான் நான் அடையக் கூடிய துன்பத்தைச் சிறிதும் எண்ணாதவராய் எனதெழிலைக் கவர்ந்து கொண்டு பிரிந்து சென்றார்.

பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவின் அல்லார் எயிலெய்தார்
பாவந் தீர்புனல் மல்கிய பாற்றுறை
ஓவென் சிந்தை யொருவரே. 4

பூமாலையையும் பிறைச் சந்திரனையும் அணிந்த திருமுடியையுடையவரும், ஒரு அம்பினால் பகைவரது முப்புரத்தையும் எய்து எரித்தவரும், மூழ்கியவரது பாவங்களைத் தீர்க்கும் புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த திருப்பாற்றுறையில் எழுந்தருளிய நாதருமாகிய சிவபெருமானே, ஓ! என் சிந்தையில் நிறைந்த ஒருவராவர்.

மாகந் தோய்மதி சூடி மகிழ்ந்தென(து)
ஆகம் பொன்னிற மாக்கினார்
பாகம் பெண்ணும் உடையவர் பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே. 5

ஒருபாகத்தில் உமாதேவியாரையுடையவரும், திருப்பாற்றுறையுள் எழுந்தருளியவரும் நாகம்பூண்ட நயவருமாகிய சிவபெருமான் வானில் தோயும் பிறைச்சந்திரனைச் சூடி, மகிழ்ந்து, எனது மேனியைப் பொன்னின் நிறமாக ஆக்கினார்.

---

சந்தோஷமே ஆரோக்கியத்தின் அடிப்படை. — மார்பி

போது பொன்திகழ் கொன்றை புனைமுடி
நாதர் வந்தென் நலங்கொண்டார்
பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை
வேதம் ஓதும் விகிர்தரே. 6

பொன்னிறமுள்ள கொன்றைமலர் மாலையணிந்த நாதர் வந்து என் அழகைக் கவர்ந்து கொண்டார். அவர் தமது திருவடிகளைத் தொண்டர்கள் தொழும் திருப்பாற்றுறையில் கோயில் கொண்டுள்ள வேதமோதும் விகிர்தராகிய சிவபிரானேயாவர்.

வாடல் வெண்டலை சூடினார் மால்விடை
கோடல் செய்த குறிப்பினார்
பாடல் வண்டினம் பண்செயும் பாற்றுறை
ஆடல் நாகம் அசைத்தாரே. 7

வண்டின் கூட்டங்கள் பண்ணோடு பொருந்திய பாடல்களை இசைக்கும் திருப்பாற்றுறையில் கோயில் கொண்டவரும், படமெடுத்து ஆடுகின்றபாம்பை அணிந்தவருமான சிவபெருமான் வாடிய வெண்டலையைச் சென்னியிலணிந்தவராய்ப் பெரிய இடபத்தைக் கொள்ளுதலைச் செய்த குறிப்பினையுடையவரானார்.

வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்
எவ்வஞ் செய்தென் எழில்கொண்டார்
பவ்வம் நஞ்சடை கண்டரெம் பாற்றுறை
மவ்வல் சூடிய மைந்தரே. 8

திருபாடற்கடலில் தோன்றிய நஞ்சு அடைந்த திருக்கழுத்தையுடையவரும், திருப்பாற்றுறையில் உறையும் முல்லை மலர்மாலை சூடியவரும், வீரருமான எமது பெருமான் தீயின் வெப்பமுடைய திருமேனியுடையவராய், திருநீறு அணிந்தவராய் வந்து பிரிவுத்துன்பம் செய்து எனதுஅழகைக் கவர்ந்து கொண்டார்.

---

கேலி செய்வது நகைச்சுவையின் பண்பு அன்று
—லத்தீன் பழமொழி

ஏனம் அன்னமும் ஆனவ ருக்கெரி
ஆன வண்ணத்தெம் அண்ணலார்
பான லம்மலர் விம்மிய பாற்றுறை
வான வெண்பிறை மைந்தரே. 9

பன்றியின் வடிவையெடுத்துக் கொண்டு திருவடி தேடிய திருமாலுக்கும், அன்னத்தின் வடிவெடுத்துத் திருமுடி தேடிய நான்முகனுக்கும் அவர்கள் தேடிக் காணாதபடி பெருந்திப்பிழம் பாகிய எமது தலைவரே நீலோத்பல மலர்கள் பூததுக் குலுங்கும் திருப்பாற்றுறையில் சோயில் கொண்டருளிய வானவெண்பிறை அணிந்த வீரராவார்.

வெந்த நீற்றினர் வேலினர் நூலினர்
வந்தென் நன்னலம் வெளவினார்
பைந்தண் மாதவி சூழ்தரு பாற்றுறை
மைந்தர் தாமோர் மணாளரே. 10

பசிய குளிர்ச்சி பொருந்திய - தருகின்ற மாதவிச் சோலைகள் சூழ்ந்த திருப்பாற்றுறை மேவிய மைந்தரும் ஒருமணாளருமாகியசிவபெருமான் வெந்த நீறு பூசியவராய், கையில் வேலேந்தியவராய், திருமார்பில் முப்புரி நூல்அணிந்தவராய் வந்து என் அழகைக் கவர்ந்து சென்றார்.

பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனைப்
பத்தன் ஞானசம் பந்தன தின்தமிழ்
பத்தும் பாடிப் பரவுமே. 11

பத்தர்கள் நிலையாக வாழ்கின்றன திருப்பாற்றுறை மேவியவரும், பேராயிரம் உடைய பெருமானுமாகிய சிவபிரானைப் பத்தனாகிய திருஞானசம்பந்தன் துதித்துப் பாடிய இனிய தமிழ்ப் பாடல்களாகிய இவை பத்தையும்பாடிப் பரவுவீர்களாக.

---

கற்றவர் என்பவர் கற்றபடி நிற்பவரே. — முகம்மது நபி

## ''திருமுறைகளில் சமுதாய நோக்கு''

ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான் எம்.ஏ., எம்ஃபில்., பி.எச்.டி

''வளவ! நின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மேல்ஏறி
அளவில் தேர்த்தானை சூழ அரசுலாந் தெருவில் போங்கால்
இளைய ஆன்கன்று தேர்க்கால் இடைபுகுந் திறந்ததாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து விளைத்தித் தன்மை''

என்றான்.

**நீதி :-**

தன்னுடைய அரசாட்சியில் ஐந்து அறிவு படைத்த பசு மணியடித்துத் தன் கன்றின்மீது தேர்செலுத்தி இறந்த குறையினை வெளிப்படுத்தியதை உணர்ந்து, தன் குலத்துக்கு ஒருமகன் உள்ளான் என்பதைக்கூட உணராமல் நீதி நூல்கள் அக்கன்றுபோன்று வேறு உருவம் செய்து தானம் செய்யலாம் என்று உணர்த்தியதையும் அறிந்தும், தன்னுடைய நீதியை உயிர்களின்மீது வைத்த கருணையை.

''ஒருமைந்தன் தன் குலத்துக்குள்ளான் என்பதும் உணரான்
தருமம்தன் வழிச்செல்கை கடனென்று''

என நீதி வழங்கிய முறையையும் உனரலாம். மேலும் திருமருகலில் திருஞானசம்பந்தப்பெருமான் தலயாத்திரையில் அவ்வூருக்கு எழுந்தருளியபோது ஒருவணிகனும் அவனை மணந்துகொள்ள வந்த கன்னியும் அவ்வூரில் தங்கி இருக்கின்ற காலத்தில அவ்வணிகனை அரவு தீண்டி இறந்துவிடுகிறான். அப்பெண் தன் தாய் தந்தையாரை பிரிந்து இவனுடன் வர இவனும் பிரிந்துவிட மீளாத் துயரத்தில் புலம்பிக் கொண்டிருக்கிற ஒலிகேட்டு, திருஞானசம்பந்தப் பெருமான் அவ்வூர் இறைவனிடம் சென்று, ''சடையைத் தரித்தவனே உலக உயிர்களுக்கெல்லாம் தலைவனாக இருக்கின்றவனே, விடையை உடையவனே என்று புலம்பிக் கொண்டிருக்கின்ற உயிர்க்கு நீயே சரணாகதியாய் இருக்கின்றவன், இவ்வூர் நீர் மடைகளில் குவளைப்பூ பூத்து கள்-நீர்சிந்த இருக்கின்ற நேரத்தில் இப்பெண்ணினுடைய குவளை மலரை ஒத்த அக்கண் கண்ணீர்சிந்துதல் முறையோ? இப்போது பூக்கின்ற *குவளைமலர்

இன்னும் சிறிது நேரத்தில் பலர் சூடக்கூடும். ஆனால் இப்பெண் இம்மலரைச்சூட முடியாமல் வருந்துதல் என்ன முறை? என்று பாடி. அவ்வணிகனை உயிர்ப்பிக்கச் செய்து அப்பெண்ணினுடைய வாழ்வுக்கு வழிவகுத்துக் காட்டியது நம்முடைய சமயம் ஆகும். எனவே இறைவன் எல்லா மக்களுக்கும் பொதுவானவன். அவ்வுயிர்கள் செய்யும் குறைகளைத் தீர்த்து நீதி வழங்குவது முறைமை என்பதினால் மன்னனும் இறைவனாகப் போற்றப்படுகிறான்.

**ஒற்றுமை :-**

நம்முடைய நாடு பல மதங்களையும் பல சமயங்களையும், பல மொழிகளையும், பல இனத்தவர்களையும் கொண்டு விளங்குவது. அனைவரும் தங்களின் கொள்கைகளால், வழிபாட்டு முறைகளால். பேசும் மொழிகளால் வேறுபட்டிருப்பினும் நாட்டால் இந்தியன் என்ற உணர்வோடு வாழ்ந்துவருவது மனித நேயத்தைக் காட்டுவதாகும். நேரு நம்முடைய நாடு 'வேற்றுமையில் ஒற்றுமை' (Unity in diversity) என்று கூறினார். நாம் ஒற்றுமையோடு கூடிய ஒருமைப்பாடு கொண்டு ஒழுகுதல் வேண்டும் என்று நம்முடைய சமயத்தலைவர்கள் வலியுறுத்தி இருக்கிறார்கள். ஒற்றுமை என்பது பல வண்ண மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையாகும் அதுபோல நாம் பல வேறாகப் பிரிந்திருந்தாலும் ஒற்றுமையுடன் வாழவேண்டும். பாலும், நீரும் போன்று ஒன்றி இருப்பது ஒருமைப்பாடாகும். அதுபோலத் தன்னுடைய குலம், மொழி, சமயம், இவைகளில் ஒன்றி இருப்பது ஒருமைப்பாடாகும். எனவே, ''ஒற்றுமையுடன்கூடிய ஒருமைப்பாடு'' அனைவருக்கும் வேண்டும். குடும்பத்திலோ, நாட்டிலோ, ஒவ்வொருவரும் ஒருமுகமாகச் சிந்தித்து எடுக்கின்ற முடிவு நன்மைபயப்பதாக அமையும். இத்தத்துவங்களையெல்லாம் இணைத்தே அப்பர்பெருமான். ''ஒன்றியிருந்து நினைமின்களுந்தமர்க் கூனமில்லை'' என்பார். எனவே சமயத்துறையிலே நின்ற அடியார் பெருமக்கள் சமுதாயத்தை நோக்கி இருக்கிறார்கள். சமுதாயத்தில் ஏற்படுகின்ற நன்மை தீமைகளைத தீர்த்துவைக்கின்ற பெருங்கருவிகளாக இருந்து இருக்கின்றார்கள். கோபுரங்களுக்கும், குடிசைகளுக்கும் சுமுகமான உறவுப்பாலமாக இருந்திருக்கிறார்கள். முற்றும்.

---

அறிவு வளர நல்ல ஆசான் வேண்டும். —உபநிஷதம்

# கயிலை வழிபாடு

''திருமுறைக்காவலர்'' M. கண்ணப்ப செட்டியார்,
''உழவாரம்'' பெருமைதரு ஆசிரியர்

மறுநாள் 3-6–98 காலை புத்தர் ஏர்வேஸ் மூலம் எவரஸ்ட் மலையை சுற்றிப் பார்க்க ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. ஆள் 1க்கு விமான கட்டணம் ரூ. 3000/- 19 பேர் ஏறக்கூடிய சிறு விமானம் மூலம் எவரஸ்ட் மலையை மிக அருகில் கூட்டிச் சென்று காட்டினார்கள் அன்றைய தினம் மேகம் அதிகம் இல்லாமல் இருந்தபடியால் எவரஸ்ட் மலை மிகவும் சுத்தமாகத் தெரிந்தது. ரம்மியமாக இருந்தது மொத்தம் 49 நிமிடங்கள் ஆகின. உபயோகமாக இருந்தது. இமயமலையை சுற்றி வந்ததற்கு அத்தாட்சியாக சர்டிபிகேட் தந்தார்கள்.

அன்று மதியம் காட்மண்டு கஸ்டம்ஸ் ஆபீசில் இருந்து கையாத்திரைக்கான Immigration Certificate பெற்றுக் கொண்டோம்.

4-6-98 காலை சரியாக '' மணிக்கு காட்டுமண்டு விடுதியில் இருந்து பேருந்து மூலம் இறைவனை வாழ்த்தி கயிலை யாத்திரை துவங்கினோம். 8 மணி அளவில் குளிக்கல் என்னும் இடத்தில் காலை உணவு தந்தார்கள். குளிக்கல் என்னும் இடம் நம்ம ஊர் கொடைக்கானல் மாதிரி கோடை வாசஸ்தலம. மிகவும் நன்றாக இருந்தது. பின் டாட்டாபாணி என்னும் நேப்பாள், சீனா பார்டரை அடைந்தோம். இதற்குமேல் நேப்பால் பேருந்து செல்லஅனுமதிஇல்லை. பேருந்திலிருந்து இறங்கி FriendshlpBridge என்னும் பாலத்தை நடந்து கடந்து சீனா பார்டரை அடைந்தோம். அங்கு எங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டு இருந்த Tayota Land Coriser என்ற Jeep கள் தயாராக இருந்தன. அவற்றில் நான்கு,நான்கு பேர்களாக ஏறிக் கொள்ள 9 Jeep களும் 2 லாரிகளும் புறப்பட்டன. ஒரு லாரியில்Jeep களுக்கு வேண்டிய பெட்ரோல் பேரல்கள், ஆயுதங்கள், மெக்கானிககுகளும் மற்றொரு லாரியில்வழியில் தங்குவதற்குதேவையான டெண்ட்டு சாமான்களும், சமையல் சாதனங்களும்பயணிகளுடைய லக்கேஜ் களும் ஏற்றிக் கொள்ளப்பட்டன. அங்கிருந்து 9ஆவது கிலோ

மீட்டரில் உள்ள Jangmu - என்ற இடத்தை அடைந்தோம். அங்கு கஸ்ட்டம்ஸ் சோதனைகள் செய்யப்பட்டு பாஸ்போர்ட் சரிபார்க்கப்படும். 4 மணி அளவில் நலம் என்ற ஊருக்குப் புறப்பட்டோம். அங்கு ஏற்பாடு ஆகி இருந்த Guest House ல் தங்கினோம். நலம் என்கின்றஊர் Jngmu-Laza என்ற நெடுஞ்சாலையில் இருக்கிது. இங்கிருந்தே குளிர் அடிக்க ஆரம்பித்து விட்டது. இரவு எங்களுக்கு சாதம், பருப்பு. உணவு வழங்கப்பட்டது.

மறுநாள் 5-6-98 காலை 8 மணி அளவில் சகா என்னும் மிலிட்டிரி கேம்ப் உள்ள இடத்தை நோக்கி புறப்பட்டோம். இடையில் 12 மணி அளவில் காலையில் தயார் செய்த Packed Food கொடுக்கப்பட்டது. சகா ஊர் வரும் முன் 80 கிலோ மீட்டர் தூரத்தில் ஒரு இடத்தில் டெண்டு அடித்து தங்கினோம். டெண்டில் தங்கியது ஒரு வினோதமான அனுபவமாக இருந்தது. இங்கு அடித்த குளிரை பற்றி எழுதுவதானால் ஒரு புத்தகமே எழுதலாம். மிகவும் அதிகமான குளிர், மிகவும் அதிகமான காற்று டெண்ட்டை விட்டு வெளியில் வந்தால் ஆளையே அடித்து கொள்வது போல் பனியும், காற்றும் இருந்தது.

காட்மண்டில் இருந்து நலம் வரை பாதை மோசமாக இருந்தாலும் மரம், செடி, கொடிகளுடன் மிகவும் ரம்மியமான, அழகிய தோற்றமுடையதாக இருந்தது. நலத்தில் இருந்து கடைசி வரை (தர்சன்) கிட்டத்தட்ட ஒரே பாலைவனமாகவே இருந்தது. அங்கு, அங்கு காட்டுப்புல் மட்டுமே வளர்ந்து இருந்தது. மரம், செடி, கொடி எதுவும் இல்லை. ஜீப் செல்லும இடமெல்லாம் ஒரே புழுதியாக இருந்தது. ரோடுகள் யாவும் தற்காலிகமாக போடப்பட்டு கரடு முரடாக இருந்தன. பயணம் மிகவும் சிரமமாக இருந்த போதிலும் கயிலையை காணவேண்டும் என்ற ஒரே எண்ணத்தினால் இருந்த சிரமம் எல்லாம் ஒரு பொருட்டாக தெரியவில்லை'

டெண்டு அடிப்பது எங்களுடன் வந்த திபெத்தியர்களுக்கு மிகவும் சுலபமாக இருந்து. அளவிற்கு அதிகமான காற்றிலும் 20, 30நிமிடத்தில் ஒரு டெண்டை அமைத்துவிடுகிறார்கள். 2 நபருக்கு ஒரு டெண்டு வீதம் 18 டெண்டுகளும் சமையல் மற்றும், சமையல் ஆட்கள் தங்குவதற்கு 2 பெரிய டெண்டும், ஆக 20 டெண்டுகள் போடப்பட்டது குளிரும், காற்றும் அதிகமாக இருந்த படியால்

---

சங்கீதம் தேவதைகளின் பேச்சு — கார்லைல்

ஒரு வேலையும் செய்ய முடியவில்லை. டெண்டுக்கு உள்ளேயே சொட்டர், காலுறை, கையுறை, குரங்கு தொப்பி இவைகள் அணிந்தும் குளிர் அதிகமாக இருந்தது. ஒருவழியாக மறுநாள் விடிந்து இரண்டாம் நாள் டெண்டு கேம்பில் இருந்து விடுபட்டு காலை கொடுக்சப்பட்ட உணவாகிய சவ்வரிசி கஞ்சி, காப்பியை பருகி 7-30 மணி அளவில் சகா நோக்கி புறப்பட்டோம். அன்று காலை எங்களுடன் வந்த கோவை அன்பர் ஒருவருக்கு உடல் நலம் மிகவும் மோசமாகி இரவு முழுவதும் சுயநினைவு இல்லாமல் இருந்து விட்டபடியால் அவரும், அவருடன் கூட வந்த மற்றொரு வரையும் காட்மண்டுக்கு ஜீப்பில் திருப்பி அனுப்பிவிட்டோம். இவ்வளவு தூரம் வந்து கயிலையை தரிசிக்கமுடியாமல் திரும்ப நேர்ந்து விட்டதே என்று வருத்தமாக இருந்தது

வழியில் பிரம்மபுத்திரா நதி குறுக்கிட்டது. அது மிகவும் ஆழமாக இருந்தபடியால் ஜீப் மற்றும் லாரிகள் மட்டும் போட்டு மூலம் அக்கரை வந்து சேர்த்து விடுகின்றார்கள். அதன்படி நதியை கடந்து 1 மணிககு சகா அடைந்தோம் இது மிக சிறிய கிராமம். மில்ட்டரி கேம்பிற்கு முக்கியத்துவம் கொடுத்து இருக்கின்றார்கள் இங்கும் சிறிய சோதனைகள் நடைபெற்றன சீனமுறையில் தயார் செய்யப்பட்ட கீரை, முட்டைகோஸ் முதலியவற்றால் ஆன மிகவும் தண்ணீர் ஆக தரப்பட்ட சூப் இவற்றுடன் சாதமும் இரண்டு குச்சிகளும் தந்தார்கள். குச்சிகளினால் சாப்பிட முயற்சி செய்து முடியாததினால் வழக்கம் போல் சாப்பிட்டோம்.

இரண்டாவது நாள் டெண்டில் தங்கிய அனுபவம் இனிமேல் டெண்டில் தங்க முடியாது என்று யாவரும் கூறியபடியால் மூன்றாவது நாள் Tongba என்ற ஊரில் உள்ள Guest House-ல் ஆள் 1க்கு சீனா நாணயம் 30 யுவான் (நமது இந்திய நாணயம் ரூ. 5 40க்கு ஒரு யுவான் சமம்) வீதம் கொடுத்து தங்கினோம். முதல் நாள் தூக்கமின்மை, ஜீப்பில் வந்த அசதி எல்லாமாக சேர்ந்ததால் நல்லவிதமாக தூங்கி எழுந்தோம்.

மறுநாள் 7-6-98 ஞாயிற்றுக்கிழமை காலை உணவை முடித்துக் கொண்டு புறப்பட்டு Dongba என்னும் ஊரின் அருகில் டெண்டு அடித்து தங்கினோம். அந்த இடத்தில் டெண்டில் தங்க முடியாது என்ற எங்களுடைய முயற்சி எடுபடவில்லை. ,காரணம் இங்கிருந்து அடுத்த ஊர் வெகுதூரத்தில் இருக்கின்றது. அதை

---

சங்கீதம் உடைந்த உள்ளத்தின் மருந்து — ஹண்ட்

அடைய இருட்டி விடும். சீனடிரைவர்கள் கார் ஓட்டமாட்டார்கள் என்றுசினகெய்டு பிடிவாதமாக கூறிவிட்டார் அதிர்ஷ்டவசமாக இந்த டெண்டுகள் மலையில் மிக அருகாமையில் இருந்தபடியால் குளிர் அதிகமாக இருந்த போதிலும், காற்று கம்மியாக இருந்தது.

மறுநாள் 8-6-98 காலை வழக்கம் போல் உணவை முடித்துக்கொண்டு எங்களது முக்கியமான கையிலை தரிசனத்துக்காக ஆனந்தமாக புறப்பட்டோம். இன்றைய பிரயாணம் மற்ற நாட்களை காட்டிலும் மிகவும் கடினமாக அமைந்தது. சுமார் 10, 15 மலைகள் ஏறி இறங்கியும், 4, 5 ஆறுகளை கடந்தும் வந்தோம் ஆறுகளில் 4, 5 அடி ஆழம் தண்ணீர் இருந்தாலும் நாங்கள் வந்த ஜீப்புகள் மிகவும் சுலபமாக ஆறுகளை கடந்து விடுகின்றது. அதே போல் எப்படிப்பட்ட ஏற்ற இறக்கங்களையும் சுலபமாக கடந்து விடுகின்றது. அன்றைய தினம் மிகவும் களைப்பாக இருந்த போதிலும் சுமார் 2 மணி அளவில் தெற்கு நோக்கி அமைந்த கையிலை மலையையும், மானசரோவர் ஏரியையும் கண்ட நிகழ்ச்சி அளவிலா ஆனந்தத்தை தந்தது. கையிலையை கண்டவுடன் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. கண்டேன். கண்டறியாதன கண்டேன் என பாடத் தோன்றியது.

இங்கு திபெத்தியர்கள் உயரமான கம்பங்களை நட்டு அதில் முக்கோண கொடிகளை தோரணமாகக் கட்டி அவற்றின் கீழ் தரையில் மூன்று அல்லது ஐந்து கற்களை குவியலாக வைத்து நாம் சாமிக்கு சாத்துவது போல் வைத்து வணங்குகின்றார்கள். அப்போது எனக்கு அங்கு ஒருபழமொழி தோன்றியது. அதாவது பொன் வைக்கும் இடத்தில்பூ வைப்பது. இன்று பூ வைப்பதற்கு பதில் அவர்களுக்கு எளிதாக கிடைக்கும் கற்களையே பூவாகவும், நிவேதனமாகவும் படைத்து மகிழ்கின்றார்கள். இப்படி ஆயிரக் கணக்கான கற்குவியல்களைக் காண்கிறோம். இறைவனை எவ்விதத்திலும் வழிபடலாம். அதில் அவனுக்கு ஈடுபாடு உண்டு என்பதை இதன் மூலம் அறிகிறோம்.

—தொடரும்

---

**இசையின்றேல் வாழ்க்கை என்பது ஒரு பிழையே**

— நீட்ஸே

## செய்திகள்

★ மதுரை தெற்காடி வீதி திருப்புகழ் சபை சார்பில் திருப்புகழ் செஞ்சொல் விளக்கவுரை 18-9-98 அன்று நடைபெற்றது. செயலர் K.T. கிருபாசங்கர் வரவேற்க கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம் விளக்கவுரை நிகழ்த்தினார். உதவிச் செயலர் ம. விஜயராஜன் நன்றி கூறினார். வேல்முருகன் ஜவுளிக்கடை அதிபர் G. முருகபூபதி விழா உபயமளித்தார்.

★ மதுரை பன்னிரு திருமுறை மன்றத்தில் ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் குருபூஜைவிழா 19-9-98 அன்றுதிருமுறைத் தொண்டர் P.R. ஸ்ரீராம் பொருளுதவியால் நடைபெற்றது. காலை 10 மணிக்கு விரிவுரையும், தமிழருச்சனை, குருபூஜை வழிபாடுகளும் நிகழ்ந்தன.

★ தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவுளப் பாங்கின் வண்ணம் சிதம்பரத்தில் மாதாந்திர வழிபாடுகள் 20-9-98 (உத்திரம்) 21-9-98 (அஸ்தம்) 25-9-98 (விசாகம்) நாள்களில் முறையே ஸ்ரீ மறைஞான சம்பந்தர் குருமூர்த்தம், ஸ்ரீ உமாபதி தேவ நாயனார் குருமூர்த்தம், அருள்மிகு இளமையாக்கினார் கோயில் (திருநீலகண்டர்) ஆகிய கோயில்களில் சிறப்பாக நடைபெற்றன. திருமுறை ஓதல், சிறப்பு வழிபாடுகள், சொற்பொழிவுகள் நிகழ்ந்தன.

★ மயிலாடுதுறை—கூறைநாடு தனியூர் சிவனடியார் திருக்கூட்டத்தின் ஆதிவார வழிபாட்டின் 44ஆம் ஆண்டு நிறைவு விழாவும் 43-ஆம் ஆண்டு சிவபூஜை விழாவும் 27-9-98 அன்று நடைபெற்றன. காலையில் சிவபூசைச் செல்வர்கள் சிவபூஜை நிகழ்த்தினர் திருமுறை வீதிவுலாவும் அறுபத்து மூவர் அபிஷேக, ஆராதனையும் மாகேஸ்வரபூஜையும் நடைபெற்றன. மாலையில் திருவையாறு கோ. சுப்பிரமணியன்செட்டியார் தலைமையில் பேராசிரியர் சா. முத்துகிருஷ்ணன் சொற்பொழிவாற்றினார்.

---

இசைக்கு எந்தச் சொற்களும் ஏற்றனவே — பிஸான்டே

★ விக்கிரமசிங்கபுரம் சைவ நெறிக் கழகத்தினர் மாதவச் சிவஞான முனிவர் ஆலயத்தில் செப்டம்பர் மாத சனிக்கிழமை களில் 'திருவருட் பயன்' தொடர் சொற்பொழிவுகளை ஏற்பாடு செய்திருந்தனர். M, சிவசண்முகம் சொற்பொழிவுகளை நிகழ்த் தினார். 17-9-98 ஆயில்யத்தன்று மாதவச் சிவஞானமுனிவருக்கு சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்பட்டன.

★ ஏனாதி நாத நாயனார் அவதாரம் செய்த ஏன நல்லூர் சிவன் கோயிலில் நாயனாரின் 12 ஆம் ஆண்டு குருபூசை விழா கிராமவாசிகள் ஒத்துழைப்புடன் 30-9-98 அன்று நிகழ்ந்தது. குடந்தை S.K.R. பானு விழாத் தலைமை ஏற்க அறங்காவலர் வி. சண்முகவேல் முன்னிலை வகித்தார். வழிபாடு, வீதிவலம், வழக்காடு மன்றம் ஆகியன நடைபெற்றன,

★ மதுரை தமிழிசைச் சங்கம் ராஜா முத்தையா மன்ற வளாகத்தில் புதியதாக வடிவமைக்கப்பட்ட ராணி மெய்யம்மை மன்றத் திறப்பு விழா 16-9-98 அன்று நடைபெற்றது. அண்ணா மலை பல்கலைக் கழக இணைவேந்தர். டாக்டர் ஏம். ஏ. எம். இராமசாமி திறந்து வைக்க திருமதி. சிகப்பி இராமசாமி குத்து விளக்கு ஏற்றினார். எம். ஏ. எம். ஆர். முத்தையா ராணி மெய்யம்மை ஆச்சி திருவுருவப் படத்தைத்திறந்து வைத்தார். முனைவர் இரா. மோகன் வாழ்த்துரை வழங்கினார். செயலர் கும. நா, சுப. ரா. மாணிக்கம் செட்டியார் நன்றி கூறினார்.

செட்டி நாட்டரசர் ராஜாசர்அண்ணாமலை செட்டியாரின் 118 ஆவது பிறந்தநாள் விழா 30-9-98 அன்று நடைபெற்றது. மதுரை காமராஜர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் சாலிகு தேவாரத் தேர்வு பெற்றவர்களுக்கு 'திருமுறைச் செல்வம்' பட்டம் வழங்கினார். பேராசிரியர் கு. ஞானசம்பந்தன் சிறப் புரை நிகழ்த்தினார். நாட்டியாஞ்சலி மாணவ மாணவியரின் நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது.

---

கடவுளும் குருவும் ஒருவர் தான் — கபீர்தாசர்

★ மதுரை இந்து நாடார் பக்த சபையில் 5-10-98 அன்று 108 திருவிளக்கு வழிபாடு நிகழ்த்தப்பட்டது திருமதி. S. ராஜசகுந்தலா. திருமதி R. அங்கயற்கண்ணி உபயமளித்தனர். தலைவர் A.P. தெய்வசிகாமணி நாடார், பொருளாளர் R. சுந்தரவேல் முன்னிலை வகித்தனர். செயலர் ஆனந்தா T. அமிர்தம் வழிபாடுஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார்.

★ சென்னை-சேக்கிழார் மன்றம்- சேக்கிழார் ஆராய்ச்சி மையத்தின் ஆதரவில் ராகப்பிரியா சேம்பர் மியூசிக் கிளப் அமைப் பின்தலைவர் P.T.R. கமலைத் தியாகராஜன் அவர்களின்'இசைத் தமிழின் உண்மை வரலாறு' என்ற இசை ஆராய்ச்சி நூல் வெளி யீட்டு விழா அக்டோபர் 5ஆம் நாள் சென்னை இராணி சீதை மன்றத்தில் நடைபெற்றது. தமிழகமுதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி நூலை வெளியிட்டு சிறப்புரை ஆற் றினார். அருட்செல்வர் டாக்டர். நா. மகாலிங்கம் தலைமை உரைநிகழ்த்தினார். திருவாளர்கள் T.S பார்த்தசாரதி, திருப் பாம்புரம் N. சண்முகசுந்தரம், டாக்டர் பிரமீளா குருமூர்த்தி, டாக்டர் சோ. சத்திய சிலன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். T.S. தியாகராசன் நன்றி கூறினார்.

★ திருக்குடந்தை திருமுறை மன்றத்தின் 26-ஆம் ஆண்டு தேவாரத் திருமுறை சிறப்பு இன்னிசை தொடக்க விழா 8-10-98 அன்று நடைபெற்றது. பழனி தேவார இசை மணிகள் ப. சண்முக சுந்தர தேகிகர், G. வெங்கடேசன் ஆகியோர் திரு முறை இன்னிசை நிகழ்த்தினர்.

---

உலகில் புனிதத்திலும் புனிதமான பொருள் அன்னையே
—சாமுவேல் டெய்லர்

★ மதுரை தியாகராசர் கல்லூரி தமிழ்த்துறையின் சார்பில் திங்கள் தோறும் நடைபெறும் சைவசித்தாந்தச் சொற்பொழிவு வரிசையில் 12-10-98 அன்று 'சமயம்' என்ற தலைப்பில் T.C.S. ராமச்சங்குப்பாண்டியன் உரை நிகழ்த்தினார். கல்லூரித் தலைவர் டாக்டர் திருமதி இராதா தியாகராசன் தலைமை தாங்கினார்.

★ திருக்குடந்தை திருமுறை மன்றத்தின் வெள்ளிவிழா செப்டம்பர் 9,10,11 தேதிகளில் சோமேசர் திருக்கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. தவத்திரு இராமதாஸ், M.N. இராமலிங்கம், திருவையாறு புலவர் கோ. சுப்பிரமணியன் ஆகியோர் தலைமை ஏற்றனர். திருச்சி அருள்நெறிக்கூட்டத் தலைவர் ப. முக்கப்பிள்ளை விழாவைத் துவக்கி வைத்தார். ஆடிட்டர் என். பஞ்சாபகேச அய்யர் விழா மலரை வெளியிட அறங்காவலர் குழுத் தலைவர் பி. பச்சையப்பன் பெற்றுக்கொண்டார். தேவார இன்னிசைகள், சிறப்புச்சொற்பொழிவுகள் நடைபெற்றன.

★ சிதம்பரம்-இல்லங்கள் தோறும் திருமுறை முற்றோதல் விழா 27-9-98, 4-10-98 ஆகிய நாட்களில் முறையே கு. சேதுரத்தினம் அவர்கள் இல்லதிலும் கனகசபை நகர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்திலும் நடைபெற்றன. தருமை S. ஞானப்பிரகாசம் திருமுறை இன்னிசை வழங்க பேராசிரியர் தா.ம. வெள்ளை வாரணம் திருமுறை விளக்கமளித்தார்.

With best compliments from :

ANNAMALAI A/c

*MADURAI - 1.*

Proprietor : PR. AL. M. M. N. Muthukaruppan' Chettiar
No. 18 North Chitrai Street, MADURAI-1.

UZHAVARAM (Monthly) Regd No. TN / MA HO 16/98
Licensed to Post Without PrePayment Under Licence No. 11/98
Posted at Madurai Bazaar Post Office on 16-10-98

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

**உழவாரம்**

ஆசிரியர் : கடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை-6.
☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம்
B-40 திருநகர், மதுரை-6. ☎ 883085

பெறுநர்
திரு N. [illegible]
7/2 [illegible]
T.T. [illegible]
[illegible]
630002



புரவலர் - ரூ. 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-

மதுரையில் மாபெரும் எவர்சில்வர் பாத்திரக்கடை
ஆனந்தாமெட்டல் கம்பெனி பர்ம்

அலுமினியம் பாத்திரங்கள்,
பிரஷர் குக்கர்கள், மிக்ஸிகள்,
பிளாஸ்டிக் சாமான்கள்.
தரமான பொருட்களை நியாயமான விலையில்
விற்பனை செய்து மக்களின் நன்மதிப்பைப் பெற்ற
ஸ்தாபனம்

எவர்சில்வர் & அலுமினிய பாத்திர வியாபாரம்
43 & 57 காமராஜர் சாலை,
கீழவாசல், மதுரை -9.
போன்: 620891, 620576.